உ

# திருஇடைமருதூர்

கும்பகோணத்தை அடுத்துள்ள திருத்தலம். வடக்கேஆந்திரத்து ஸ்ரீ சைலம்-மல்லிகார்ச்சுனம் தலை மருது. ( அர்ச்சுனம்= மருதமரம் ). நெல்லைமாவட்ட அம்பாசமுத்திரம் அருகில் உள்ளது திருப்புடை மருதூர் - புடார்ச்சுனம். இதுகடைமருது. இவ்விரண்டுக்கும் இடையில் உள்ளதாதலின் இது இடைமருது ஆயிற்று. இதனைச் சுற்றியுள்ள ஒன்பது தலங்களை இதன் பரிவாரத் தலங்கள் என்பது மரபு. மருதமரம் தலமரமாதலின்

"காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் **மருத மாணிக்கத் தீங்கனி** "

( திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.8 :23- 24 )

என்று பட்டினத்துப்பிள்ளையார் போற்றுவதால் **மருதவாணர்** என்றும் பரிவாரத்தலங்களாக ஒன்பதை இப்பெருமான் பெற்றுள்ளதால் **மகாலிங்கம்** என்றும் போற்றப்பெறுகிறார். மூவர் தேவாரம், மாணிக்கவாசகர், கருவூர்த் தேவர், பட்டினத்துப்பிள்ளையார்பாடல்கள் பெற்றது. மிகப்பெரிய கோயிலாக விளங்கும் இது, திருவாவடுதுறை ஆதீனத்திருக்கோயிலாகும்.

*********

## திருவிடைமருதூர்
## அருள்தரு மருதவாணர் தோத்திரப்பதிகம்

ஆசிரியர்
திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்
**திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை** அவர்கள்

***********

1. திருவார் நினது திருநீறே
தீர்க்கும் ஆர்க்கும் உடற்பிணியும்
கருவார் பிறந்தை அடற்பிணியும்
எனல்கண்(டு) அடைந்தேன் கரு(து)உருவோ(டு)
அருவார் கருணைப் பெருங்கடலே
அடியார்க்(கு) எய்ப்பில் வைப்பேநன்
மருவார் மலர்சார் இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை:** திரு= தெய்வத்தன்மை. ஆர்க்கும்= எத்தகையவர்க்கும் / ஆரவாரிக்கும் - முற்றிய. பிறந்தை= பிறப்பு. அடல்= ஆற்றல். எய்ப்பினில் வைப்பே= இளைத்த காலத்தில் உதவும் மாநிதி. மரு= மணம்.

**பொழிப்புரை**: அருவம் மட்டுமன்றி, நினைத்து வழிபடவிரும்புவோர்க்கு உருவமும்கொள்ளும் கருணைப்பெருங்கடலே ! அடியவர்களுக்கு அவர்கள் இளைத்த காலத்தில் உதவும் மாநிதியே ! மணம்பொருந்திய மலர்களுடைய திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு இடைமருதவாணரே ! நினது தெய்வத்தன்மை பொருந்திய திருநீறே முற்றிய உடல்நோயை மட்டுமன்றி, கருவிலமைந்து தோன்றும் ஆற்றல்வாய்ந்த பிறவிநோயையும் தீர்க்கும் என்பதைக்கண்டு உன்னைச் சரணடைந்தேன் . அடியேன்மேல் கருணைகூர்ந்து அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : இரங்காயே - ஏகாரம் அசைநிலை

2. ஏழைத் திருமால் அயன்ஆதி
இமையோர் பலரும் இறவாது
பாழைக் கரு(து)ஆ லாலநுகர்
பரமா பரம கருணையனே
ஊழைப் புறங்காண் வலியர்நினை
உணரும் திறலி னாரன்றே
வாழைப் படப்பை இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : ஏழை= ஞானத்தில் வறுமைப்பட்ட. பாழைக்கருது= இறக்கச்செய்யும். ஆல ஆலம்= கருநிற நஞ்சு. நுகர்= உண்ட. பரமா= மேலானவனே. ஊழைப் புறங்காண் வலியர்= ஊழ்வினையையும் வெற்றிகொள்ளும் வலியராகிய ஞானிகள். திறல்= ஆற்றல். படப்பை= தோட்டம்.

**பொழிப்புரை** : வாழைத்தோட்டங்களுடைய திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே! ஞானத்தால் வறுமைப்பட்ட திருமால், நான்முகன் முதலிய தேவர்கள் பலரும் இறவாதிருக்க, உண்டாரை இறக்கச்செய்யும் கருநிற நஞ்சினைஉண்ட மேலானவனே! முழுமையான கருணைவடிவனே! ஊழ்வினையையும் வெற்றிகொள்ளும் வலியராகிய ஞானிகளே நின்னை உணர்வர். நான் அத்தகையன் இல்லை. ஆயினும் அடியேன்மேல் கருணை கூர்ந்து அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : அன்றே - அசைநிலை.

3. ஊனம் அளக்கும் திறம்தொழும்பின்
ஒருப்பட் டார்பால் சிறிதும்இலாய்
நானம் அளக்கும் பெருநலமா
முலைஓர் பாகம் நயந்தவனே

ஏனம் அளக்கும் திறம்அரிதாய்

இசைப்பார்க்(கு) எளிதாம் திருவடியாய்

வானம் அளக்கும் இடைமருத

வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : ஊனம்= தீமை. அளக்கும்= எண்ணும். தொழும்பின் ஒருப்பட்டார்= அடிமைப்பட்டு முனைபவர். நானம் அளக்கும்= கத்தூரி கமழும். ஏனம்= பன்றி உருவெடுத்த திருமால். இசைப்பார்= போற்றிக் கூறுபவர். வானம் அளக்கும்= வானளாவிய.

**பொழிப்புரை** : வானளாவிய புகழ்வாய்ந்த திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே! தீயவற்றையே எண்ணி அதற்கு அடிமைப்பட்டு, தீங்கேசெய்ய முனைபவர்களிடம் நீ அணுவளவும் இல்லாதவன். கத்தூரி கமழும் அருள்தரு பெருநலமாமுலையம்மையை ஒருபால் விரும்பி ஏற்றவனே ! பன்றி உருவெடுத்த திருமாலால் காணற்கரிய திருவடியனே! உன்னைப் போற்றிக்கூறுகிறவர் காண எளியதிருவடியனே ! உன்அடியவனான என்மேல் கருணை கூர்ந்து அருள்புரிக.

4. நீறு புனைவேன் ஐந்தெழுத்து

நெஞ்சம் கணிப்பேன் நின்நாமம்

பேறு பிறி(து)இல் எனப்புகல்வேன்

பிணிக்(கு) ஆட்பட்டு வருந்துவனோ

சீறு பகைவர் புரம்வேவச்

சிரித்தாய் தரித்தாய் சூலம்மழு

மாறு வளம்இல் இடைமருத

வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : ஐந்தெழுத்து= சிவாயநம. கணிப்பேன்= எண்ணுவேன். பிறிது பேறு இல். சீறு= சினந்த. பகைவர்= முப்புர அசுரர் - தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணாசுரன். வளம் மாறு இல்= வளத்தில் குன்றாத.

**பொழிப்புரை** : வளம்குன்றாத திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே ! நான் திருநீறு தரிப்பேன், திருவைந்தெழுத்தாகிய சிவாயநம என்பதையே எண்ணுவேன், உன்திருப்பெயராகிய நமச்சிவாய என்பதைதவிர அடையும்பேறு வேறில்லை என்பேன். இத்தகைய நான் பிணிவாய்ப்பட்டு வருந்தவேண்டுமா ? சூலம் மழு ஆகிய ஆயுதங்களைப் பெற்றிருந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல், உயிரினங்களைச் சினந்த அசுரர்களின் முப்புரங்களைப் புன்முறுவலால் நீ எரித்தாய். அடியேன்மேல் கருணைகூர்ந்து அருள்புரிக.

( பிணி என்னும்சொல் உடல்பற்றிய நோய் என்றும், உயிர் பற்றிய மும்மலநோய் என்றும் பொருள்பட நின்றது ).

**விளக்கம்** : மூவெயில் எரித்தது : “ மூவெ யில்செற்ற ஞான்று உய்ந்த மூவரில் இருவர் நின்திருக் கோயில் வாய்தல் , காவ லாளர்என்று ஏவிய பின்னை ஒருவ நீகரி காடரங் காக , மானை நோக்கியோர் மாநடம் மகிழ மணிமு ழாமுழக் கஅருள் செய்த , தேவ தேவநின் திருவடி அடைந்தேன் செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே “ - ( திருமு. 7. திருப்புன்கூர் . 8 )

5. கூற்றம் சிதைய இறைநீண்ட
கோக னகத்தா ளாய்அமரர்
ஏற்றம் சிதைய எழுந்தவிடத்(து)
ஏற்றம் சிதைய எடுத்(து)அயின்றாய்
தோற்றம் சிதையப் பல்லுயிரும்
தொழுது போற்றித் துதிக்கும்உயர்
மாற்றம் சிதையா இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : இறை= சிறிதளவு. கோகனகம்= தாமரை. ஏற்றம்= வாழ்வு. ஏற்றம்= ஆற்றல். தோற்றம்= பிறவிநோய். மாற்றம்= சொல் - புகழ்.

**பொழிப்புரை** : பிறவிநோய் கெட, பலவகைப்பட்ட உயிர்களும் தொழுதும் போற்றியும் துதிக்கும் உயர்ந்த புகழில் குன்றாத திருவிடை மருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே ! மார்க்கண்டேயனைக் கொல்ல வந்த கூற்றுவனை உதைக்கும் பொருட்டுச், சிறிதளவு நீண்ட தாமரைமலர் போன்ற திருவடியனே ! தேவர்களின் வாழ்வுகெட எழுந்த நஞ்சினை அதன் ஆற்றல் கெடஎடுத்து உண்டாய். தேவர்பொருட்டு நஞ்சுண்ட நீ அடியேன்மேல் கருணை கூர்ந்து அருள்புரிக.

6. ஆயா நினையே சரணடைந்தார்(கு)
அன்றி அவ்வா(று) அடையார்க்கும்
ஏயா தோநின் அருள்பெருவான்
இழிந்த களர்க்கும் பொழிதருமே
தாயாய் அளிசெய் தலைவாமுத்
தலைவேல் பரித்தாய் எஞ்ஞான்றும்
மாயா வளம்கூர் இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : ஆயா= எவ்வித ஆய்வுமின்றி. நின்னருள் ஏயாதோ. ஏயாதோ= சேராதோ. வான்= மழை. அளி= கருணை. வேல்= சூலம். பரித்தாய்= தாங்கினாய். கூர்= மிக்க.

**பொழிப்புரை** : தாயாகக் கருணைவழங்கும் தலைவனே ! முத்தலைச் சூலம் ஏந்தியவனே ! அழியா வளங்கள் மிக்க திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே ! எவ்விதஆய்வுமின்றி உன்னையே சரணடைந்தவர்க்கன்றி , அங்ஙனம் அடையாதாரை உன்னருள் சென்று சேராதா ? பெருமழைநீர் நன்செய்க்கு மட்டுமன்றி இழிந்த களர்நிலத்துக்கும் உரித்தாகுமே ! அதுபோல் உன்கருணையை அடியார்க்கு மட்டுமன்றி, எனக்கும் வழங்கியருள்புரிக.

7. உணங்கல் மீனுக்(கு)உயிர்உதவி
உயர்நின் உலகம் புகப்புரிந்தாய்
சுணங்கன் நரிஆ தியர்க்(கு)அரிய
தூமுத் தியில்சார் தரல்குறிதாய்
அணங்(கு)அல் லவர்க்கும் உறல்கருதா
அண்ணா அமுதே அருட்கடலே
வணங்கல் புரிவேன் இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : உணங்கல் மீன்= காய்ந்த மீன் - கருவாடு. நின் உலகம்= வீடுபேறு. சுணங்கந= நாய். சார்தரல் குறித்தாய்= அடையச் செய்தாய். அணங்கு அல்லவர்= தெய்வத்தன்மை இல்லாதவர். உறல்= நெருங்குதல் அண்ணா= நெருங்காத.

**பொழிப்புரை** : திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள மருதவாணரே ! கருவாட்டுக்கும் உயிரருளி உயர்ந்த நின் வீடுபேற்றினை அருளினாய் ! நாய் நரி முதலிய உயிர்களும் தூய முத்தி அடையச் செய்தாய் ! தெய்வத்தன்மை இல்லாதவர்களும் நெருங்குதற்கரிய அமுதே ! அடியேன்மேல்கருணைகூர்ந்து அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : அணங்கல்லவர்க்கும் - ( தெய்வத்தன்மை சிறிதுடைய நான்முகன் திருமால் முதலியோரைக் குறிப்பதால் ) உம்மை, எச்சவும்மை.

8. அந்தோ நினக்கு வரகுணனில்
அன்பு புரிவார் ஒருவர்இலர்
முந்துஓ(து) அனையற்(கு) அருள்வதலால்
முயலும் பிறருக்(கு) அருளாயோ
நந்(து)ஓ வருநீர் எறும்(பு)அளையும்
நண்ணும் நறுவா சனைப்பொதியில்

அந்தோ அரிய இடைமருத வாணா
அடியேற்(கு) அருளாயே.

**குறிப்புரை** : அந்தோ= ஐயோ. வரகுணனில்= வரகுண பாண்டியனைப் போல். முன்பு ஓது அனையற்கு= அன்புபுரிவதில் முன்சொல்லப்பட்ட வரகுண பாண்டியனுக்கு. ஓவரு நந்து நீர்= இடைவிடாது பெருகும் தண்ணீர். அந்தோ= இரக்கம் காட்டும்சொல்.

**பொழிப்புரை** : திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே ! வரகுண பாண்டியனைப்போல் உன்னிடம் அன்புசெலுத்துவார் ஒருவரும் இல்லை. முன்பு சொன்ன அப்பாண்டியனுக்கு அருள்புரிவாயே தவிர உன்பால்அன்புசெலுத்த முயலும்பிறர்க்கு அந்தோ ! அருளமாட்டாயோ ? நறுமணம்கமழும் பொதியமலைப்பகுதியில் ( உள்ளது கடும்பாறையாயினும் ) இடைவிடாது பெருகும் தண்ணீர் அங்குள்ள எறும்புத்துளையிலும் புகும். அதுபோல் கல்லாம் மனத்துக் கடைப்பட்டவனாயினும் உன்னை அடைய முயலும் அடியவனாகிய என்மேல் கருணகூர்ந்து அந்தோ ! அருள்புரிக.

**விளக்கம்** : வரகுண பாண்டியனின் பேரன்பு :
“வெள்ளை நீறு மெய்யில் கண்டு
கள்ளன் கையில் கட்டுஅவிழ்ப் பித்தும்,
ஓடும் பல்நரி ஊளைகேட்டு அரனைப்
பாடின என்று படாம்பல அளித்தும்,
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவியும்,
வழிபடும் ஒருவன் மஞ்சனத்து இயற்றிய
செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவன்இப் பிறப்புக்கு என்ன
இடித்துக் கொண்டுஅவன் எச்சிலை நுகர்ந்தும்,
மருத வட்டத்து ஒருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல எம்இத் தலையும்
கிடக்க வேண்டும் என்று அடுத்து அடுத்து இரந்தும்,
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்தது என்றுநாய்க் கட்டம் எடுத்தும்,
காம்புஅவிழ்ந்து உதிர்ந்த கனிஉருக் கண்டு
வேம்புகட்கு எல்லாம் விதானம் அமைத்தும்,
விரும்பின கொடுக்கை பரம்பரற்கு என்று
புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த

பெரிய அன்பின் வரகுண தேவரும் "
( திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. 28 )

9. அண்டர் பரவும் நிராமயன்நீ
அதனால் தரணி எனும்நாமம்
கொண்ட(து) உனக்குத் தகுமெனலுட்
குறித்தே உன்னைச் சரணடைந்தேன்
தொண்டர் துயரம் சகியாத
தூயா நேயா தாயானாய்
வண்டர் மலர்க்கா இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே .

**குறிப்புரை** : நிராமயன்= அருவமானவன். தரணி= கடவுள்.

**பொழிப்புரை** : தொண்டர்களின் துயரம்காணப் பொறுக்காத தூயவனே! அன்பனே! தாயானவனே! திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணனே! அண்டத்தவரெல்லாம் போற்றும் அருவமானவன் நீ . அதனால் நீ கடவுள் என்றுபெயர்கொண்டது தகுதியானதே என்று உன்னைச் சரணடைந்தேன். அடியேன்மேல் கருணை கூர்ந்து அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : வண்டர் - கடைப்போலி.

10. ஆழி புடைசூழ் உலகில்உனை
அன்றித் தெய்வம் பிறி(து)உளதோ
பாழி அமைநின் அருட்(கு) அகலாப்
படரும் உளதோ பனிவரைவாய்
வீழி புரையும் பெருநலமா
முலையாள் மேய விடைப்பாகா
வாழி வளம்சால் இடைமருத
வாணா அடியேற்(கு) இரங்காயே.

**குறிப்புரை** : உளதோ= இல்லை. பாழி= பெருமை. படர்= துன்பம். வீழி புரையும் பனி= நீண்டவிழுது போலுறைந்த பனியுடைய இமயமலையில். வாழி வளம்= நிலைத்த வளம்.

**பொழிப்புரை** : நீண்ட விழுதுபோல் உறைந்த பனியுடைய இமயமலைக்குரிய பெருநலமா முலையம்மையை இடப்பாகம் கொண்டு விடையினைச் செலுத்துகிறவனே! நிலைத்த வளம் மிக்க திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு மருதவாணரே ! கடல் சூழ்ந்த இவ்வுலகில் உன்னைத்தவிர வேறுதெய்வம் இல்லை. பெருமை பொருந்திய உனது அருளுக்கு நீங்காத துன்பம் எதுவுமில்லை. அடியேன்மேல் கருணைகூர்ந்து அருள்புரிக.

